உ
ஸ்ரீ ராம ஜயம்

# தர்ம சாஸ்திர சுருக்கம்

தர்மம் அதர்மம் என்பவை பிரத்யக்ஷத்தாலோ யுக்தியாலோ தீர்மானிக்க முடியாதவை. வேத சாஸ்திரங்களினாலும் அவைகளை அறிந்த பெரியோர்களின் அனுஷ்டானத்தாலும் தான் தீர்மானிக்கக் கூடியவை. தங்களுக்குரிய ஜாதி வர்ணாசிர தர்மங்களை ஈச்வரார்பணமாகச் செய்து கொண்டு, ஈசுவர பக்தியையும் செய்து கொண்டு வந்தால் கிரமமாக க்ஷேமங்களையும், மோக்ஷத்தையும் அடைய லாம். கலி யுகத்தில் சக்திக்குத் தக்கவாறு தானமும் பகவத் பக்தியும் ஸுலபமாக அனுஷ்டித்துப் பயன் பெறலாம். அடிப்படியான ஸ்னானம், சௌசம் முதலான ஆசாரமில்லாமல் செய்யும் தர்மம் பயன் தராது. செய்த தர்மங்களை பிறரிடம் பெருமைக்காகச் சொன்னால் பலன் போய் விடும். வயதான தாய் தந்தையர்கள், பதி விரதையான மனைவி, சிறு வயதான குழந்தைகள் இவர்களை எந்த விதத்திலும் காப்பாற்ற வேண்டும். நல்லவர்களிடமே பழக வேண்டும்.

ஸகல மனிதர்களுக்கும் பொதுவான தர்மங்கள்: -

பொறுமை, பிறர்க்கு பிரியமாயும் நன்மையாகவும் உள்ள ஸத்யத்தைப் பேச வேண்டும். மன அடக்கம், சரீர சுத்தம், பரோபகாரம், இந்திரியங்களை கண்டபடி விடாமல் அடக்கம் அஹிம்ஸை, பெரியோர்களுக்குப் பணிவிடை, புண்ய தீர்த்த யாத்திரை, தயவு, வஞ்சகமின்மை, பேராசையின்மை, பொறாமையின்மை, தேவ பிராமண பக்தி, இது முதலானவை. கர்மாக்களைச் செய்து முடிவில் கிருஷ்ண ஸ்மரணம், உபவீதமில்லாமலும், கழுத்தில் உத்தரீயத்தைச் சுற்றிக் கொண்டும் வைதிக கர்மாக்களைச் செய்யக் கூடாது. பிராமணனுக்கு பிராமண ஸ்திரீயிடம் பிறந்து (வைதிக விவாஹ முறையில்) ஜாத கர்மம் முதலான ஸம்ஸ்காரங்கள் உரிய காலங்களில் செய்யப் பெற்றவனே முக்யமான பிராமணன். நற்குணங்கள் முக்யமானவை. பெரியோர்களைக் கண்டால் உடன் நமஸ்காரம் செய்பவனுக்கு ஆயுள், புத்தி, புகழ், சரீரபலம் இவைகள் விருத்தியடையும். ஸகல ஜாதி புருஷர்க ளும் தங்கள் ஸ்தீரிகள் கெட்டு விடாமல் அவர்களை காப்பாற்ற வேண்டும். பதி சுச்ரூஷை செய்யும் ஸ்தீரிகளுக்கு ஸ்வர்க்க லோகம் கிடைக்கும். பதிவிரதையான ஸ்தீரிகளுக்கு இவ்வுலகிலும் மறுஉலகிலும் க்ஷேமம் உண்டு. அவர்களை மற்றவர்கள் பார்வதீ தேவியாக நினைக்க வேண்டும். வைதிக தர்மானுஷ்டானம் செய்து கொண்டு ஜீவிப்பவன் இவ்வுலகிலும், மேல் உலகிலும் க்ஷேமத்தை அடைவான். விடியல் காலையில் 4½ மணியான பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்து கை கால் சுத்தம் செய்து கொண்டு பகவானுடைய நாம சங்கீர்த்தனம் செய்ய வேண்டும். ஸுரியோதய காலத்திலும் அஸ்தமன காலத்திலும் தூங்கக் கூடாது. பிறகு ஸரீர சுத்தி ஸ்னானம், ஸந்தியாவந்தனம். ஸந்தியா வந்தனத்தை ஒருக் காலும் விடக்கூடாது. த்ரி கால ஸந்தியா வந்தனம், காயத்ரீ ஜபம் முடிந்த வரையில் அவசியம் செய்ய வேண்டும். சாஸ்த்ரீய கர்மாக்களை நம்பிக்கையுடன் செய்ய வேண்டும். இல்லையேல் பலனில்லை. ஸகல வர்ணத்தார்களுக்கும்

ஸ்னானம் அவசியம். ஸ்நாந காலத்தில் நாராயண ஸ்மரணம் செய்யவும். கங்கையை ஸ்மரிக்கலாம். மற்ற நதிகளில் ஸ்நாநம் செய்தும் கங்கையை ஸ்மரிக்க லாம். ஆனால் கங்கையைத் தவிர வேறு நதியை ஸ்மரிக்கக் கூடாது. முறைப்படி ஸ்நாநம் செய்வதால் சரீரபலம், அழகும், புகழ், தர்மம், ஞானம், ஸுகம், தைரியம், ஆரோக்யம் இவைகள் கிடைக்கும். நாய் முதலானவைகளைத் தொட்டால் ஸ்னானம் செய்யவும். உத்ஸவ தெரிசனம், மங்கள காரியங்கள், பந்துக்களை வழியனுப்பதல், போஜனம் இவைகளைச் செய்த பிறகு ஸ்னானம் (உடன்) செய்யக் கூடாது. கோபீ சந்தனமோ, விபூதியோ அவசியம் நெற்றியில் இட்டுக் கொள்ள வேண்டும். ஸந்தியா வந்தனம் செய்தால் பயங்கள் நீங்கி க்ஷேமத்தையும் ப்ரும்ம லோகத்தையும் அடைவான். காயத்ரீ ஜபம் முக்யமானது. நித்ய கர்மாவைச் செய்த பிறகு மற்ற மந்திரங்கள், நாம ஸங்கீர்த்தனம் செய்ய வேண்டும். சுவாமிக்கு நிவேதனம் செய்யாமல் சாப்பிடக் கூடாது. குருவை கேவலம் மனுஷ்யனாகவும், சாளக்ராம சிவலிங்கங்களை கல் சிலை என்றும், மந்திரங்களை கேவலம் சப்த மாத்ரம் என்றும் நினைப்பது பாபம். பசியுடன் வந்த அதிதியை இயன்ற அளவு உபசரிக்கவும். கை கால் சுத்தம் செய்து கொண்டு ஆசமனம் செய்து கிழக்கு முகமாக இருந்து போஜனம் செய்வது விசேஷம். தரையில் ஆசனத்தில் (பலகை) உட்கார்ந்து புசிப்பது நலம். போஜன காலத்தில் வீண் பேச்சுக் கூடாது. பிராணாஹீதி (பரிஷேசனம்) அவசியம். பகலில் தூங்கக் கூடாது. பிறரை நிந்தனை செய்யக் கூடாது. ஸதா தாம்பூலம் போட்டால் ஆயுஸ், புத்தி, பலம் சக்தி குறையும். பகலில் இரண்டு யாமங்களுக்குள்ளும், இரவில் ஒரு யாமத்துக்குள்ளும் போஜனம் செய்யவும். வடக்கில் தலை வைத்துப் படுக்கக் கூடாது. பகவானை ஸ்மரித்துக் கொண்டு இரவில் தூங்க வேண்டும். பகலில் கை, கால்கள் சுத்தம் செய்து கொண்டு உடன் போஜனம் செய்ய வேண்டும். இரவிலும் நித்திரை செய்யும் முன் கால் சுத்தம் செய்து கொண்டு ஈரம் உலர்ந்த பின் தூங்க வேண்டும்.(படுக்க வேண்டும்). பிறப்புத் தீட்டு, இறப்புத் தீட்டுக் காலங்களிலும் ஸந்தியா வந்தனம் சுருக்கமாகச் செய்ய வேண்டும். தீட்டு உள்ளவர்களுடைய அன்னத்தையும் மற்றவர்கள் புஜிக்கக் கூடாது. வெளியூர் செல்பவனுக்கு வித்யை ஸ்நேஹிதன் (நன்மை செய்பவன்) வீட்டிலிருப்ப வனுக்கு மனைவி, வியாதி உள்ளவனுக்கு வைத்யன் மரணமடையப் போகிறவனுக் குத் தானம் ஸ்நேஹிதர்கள் என அறியவும். மாதா, பிதாக்களை உத்தேசித்த பிதிரு காரியங்களை (சிரார்தாதிகளை) விடக் கூடாது. மஹாளய சிரார்த்தம் ஹிரண்ய ரூபமாயாவது அவசியம் செய்யவும்.

ஸூர்யாஸ்தமானத்திலிருந்து ஆறு நாழிகை வரை பிரதோஷ காலம். காலை, மாலை ஸந்தியா காலங்களில் நித்திரை, போஜனம் கூடாது. ஸாளக்ராமம், சிவலிங்கம் விக்ரகங்கள், சங்குமணி சந்தனக் கட்டை, ஸ்வர்ணம், புஸ்தகம், தீபம், ருத்ராக்ஷம் துளஸி முதலியவைகளை தரையில் வைக்கக் கூடாது. ஏகாதஸி விரதமிருந்தால் விஷ்ணு ஸாயுஜ்யம் கிடைக்கும். விநாயக சதுர்த்தி, ஜந்மாஷ்டமி, ஸ்ரீ ராம நவமீ, ஸரஸ்வதீ பூஜை முதலான புண்ய தினங்களில் அந்தந்த தேவதை களை பூஜிக்கவும்.

கூடியவரையில் தனக்குரிய தர்மங்களை கால தேசங்களையனுசரித்து இயன்ற அளவு செய்ய வேண்டும். பாபங்களையும் செய்யக் கூடாது. இக்காலத்தில் அவ்விதம் நடப்பது சிரமம். ஆகையால் முடிந்த அளவு பிராயச் சித்தம் செய்து கொள்ளவும்.

பிராயச் சித்தம் என்பது இந்த கர்மாவைச் செய்தால் பாபம் நீங்கும் என்று நம்பிக்கையுடன் செய்யும் கர்மாவுக்கு பிராயச் சித்தம் எனப் பெயர். அடிப்படையாக ஸந்தியா வந்தனத்தை விடக்கூடாது. பிறகு ஆயிரம், மூவாயிரம் என பிராயச்சித்த மாக காயத்ரீ ஜபம் செய்தல், முறைப்படி புண்ய நதிகளில் ஸ்நாநம், ஸேது ஸ்நானம், கெங்கையில் ஸ்நானம் கூச்மாண்ட ஹோமம் என்ற ஹோமம், தானங் கள் இவைகளைச் செய்யலாம். கடைசியாக ஸுலப பிராயச்சித்தம் கூறப் பட்டிருக் கிறது. தெரிந்தோ, தெரியாமலோ செய்த பாபத்திற்கு செய்து விட்டோமே என்ற அனுதாபத்துடன் ஒரு மனதுடன் அச்யுதனை தியானம் செய்தால் பாபங்கள் நீங்கும். இடைவிடாது ஸாம்ப பரமேசரனை கீர்த்தனம் செய்தால் பாபம் நீங்கி சுத்தனாவான். ஸ்ரீ ருத்ர ஜபம், உபநிஷத் பாராயணம், விஷ்ணு ஸஹஸ்ர நாம ஜபம் இவைகளும் பிராயச்சித்தங்களாகும். ஆனால் பகவானுடைய நாம ஜபம் செய்து பாபங்களைப் போக்கிக் கொள்ளலாம் என்று நினைத்து பாபங்களைச் செய்தால் நாமஜபம் பாபங்க ளைப் போக்காது.

அது மாத்திரமில்லை நாம அபராதம் என்ற கூறதல் பாபம் ஏற்படும். தெரிந்தோ தெரியாமலோ செய்த பாபங்களுக்கு அனுதாபத்துடன் பிராயச்சித்தம் செய்தாலே பாபம் நீங்கும். கலியுகத்தில் ஸக்தி இருந்தால் வேதம் படித்து அனுஷ் டானம் செய்யும் பிராமணர்களுக்கு தானம் செய்தும் ஸுலபமான பிராயச்சித்தமா கும். ஹரி ஸ்மரணம், பஞ்சாக்ஷர ஜபம், சிவ ஸ்மரணம் இவைகளும் பாபக்ஷயகரம். தர்ம சாஸ்திரங்கள் விஸ்தாரமாக உள்ளது. அவைகளின் படி நடக்க முடியாதே என்று ஆஸ்திகர்கள் பயப்பட வேண்டாம். கலியுகம் இப்பொழுதுள்ள கால, தேச வர்த்தமானங்களை அனுஸரித்து பகவத் பக்தியுடன் முடிந்த அளவு தர்மங்களை செய்தாலும் பரம க்ஷேமத்தை யடையலாம்.

சிவார்பணமஸ்து

---

ஈச்வரனிடம் பக்தியில்லையேல் மனித ஜன்மம் பயனில்லை. சில நாஸ்திக ர்கள் குதர்க்கத்தால் கடவுளை மறுக்கிறார்கள். ஆஸ்திக மதங்கள் எத்தனையிருந்த போதிலும் எல்லா நதிகளும் ஸமுத்திரத்தில் சேருவது போலும் ஒரே ஈஸ்வரனிடம் முடிவடைகின்றன. பெயர் மாறுதலே வேறில்லை.

கடவுள் அனந்த குணமுள்ளவர் ஆயினும் மனிதன் தன் புத்திக்கு எட்டின அளவு துதிக்க வேண்டும். மனிதன் கடவுளின் அருளினாலேயே மேன்மையடைகி றான். அதை அறியாதவன் கர்வம் கொண்டு கெட்ட வழி செல்கிறான்.

பெரியோர்களை அவமதிப்பவன் நன்மையடையமாட்டான். சிரத்தை இல்லாமல் செய்யும் வைதீக கர்மா பலனளிக்காது. விரோத புத்தியுடன் செய்தால் தனக்கே தீங்கு விளையும். போஜனம் செய்த பிறகு தினந்தோறும்

"*சர்யாதிம்ச ஸுகந்யாம்ச, ச்யவனம் சக்ரம் விநௌ |*
*புக்த மாத்ரம் ஸ்மரேத்யஸ்து சக்ஷுஸ்தஸ்அ நஹீயதோ*" ||

சர்யாதி, ஸுகந்யை, ச்யவநர், இந்திரன், அச்விநீ தேவர்கள் இவர்களை ஸ்மரித்தால் நேத்ர ரோகம் வராது".

ஒரு அக்ஷௌஹிணீ என்ற எண்ணிக்கை:-

21,870 யானைகள், 21,870 தேர்கள், 65,610 குதிரைகள், 109,350 காலாள் படை சேர்ந்தது". செய்த பாபத்தைத் தானே பிறரிடம் சொன்னால் பாபம் குறைவு படும். "ஸ்ரீ ராம ஜயராம ஜய ஜய ராம" என்ற மந்திரத்தை நாமாக்களை, போஜனம் செய்த உடன் இருபத்தொரு தடவை சொன்னால் பாபக்ஷயம் ஏற்படும்.

"*ஹரே ராம, ஹரே ராம, ராம ராம ஹரே ஹரே*
*ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண, கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே*"

என்று ஜபம் செய்தால் கலியுகத்தில் ஏற்படும் பாபம் நீங்கும், என்று கலி ஸந்தரண உபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது.

"*பிராயச் சித்தாதி அசேஷாணி தப: கர்மாத்காநிவை |*
*யாநிதேஷா மசேஷாணாம் க்ருஷ்ணாநுஸ்மரணம்நிவை* ||

என்று சாஸ்திரம் கூறுகிறது. பாபங்கள் நீங்குவதர்க்காக உபவாஸம் என்ற தபஸ், கூச்மாண்ட ஹோமம் முதலான கர்மாக்கள், தானங்கள், ஜபங்கள், ஹோமங்கள், தீர்த்த ஸ்நாநம் இது போன்ற எத்தனையோ பிராயசித்தங்கள் சாஸ்த்திரங்களில் கூறப்பட்டுள்ளன. அவைகள் எல்லாவற்றையும் காட்டிலும் இடை விடாது "கிருஷ்ண ஸ்மரணம்" மேலானது என்று பொருள்.

"*மஹாதேவ மஹாதேவ*" என்று தொடர்ந்து கூறினால் கைலாஸ வாயில் திறக்கும். காட்டுத் தீ புதர்களை எரிப்பது போல் பாபங்களை எறிக்கும். மஹா பாபங்களும் கூட ஸிம்ஹ கர்ஜனையைக் கேட்ட மத யானைகள் ஓடுவது போல் விலகும். மோக்ஷ வாசல் திறக்கும், முக்தியும் கிடைக்கும் என்பது ஞான ஒளியான பரமேஸ்வரன் அர்த்த நாரீச்வரராக ஹிருதயத்தில் இருக்கிறார் என்று தியானம் செய்தால் ஸகல பாபங்களும், கஷ்டங்களும் தூர விலகும். மேலும் மங்களங்கள் ஏற்படும் என்பது சாஸ்திரம்.